# வஹாபிஸம்





## வரலாறும் புனைவும்

ஜுஹ்பி

## வஹாபியிஸம்

எப்பா! அந்த பெயரே ஒரு terror ஆ இருக்குப்பா!!

இன்று பரவலாக முஸ்லிம்கள் மத்தியிலும் முஸ்லிம் அல்லாதோர் மத்தியிலும் சாதாரணமாக பாவிக்கப்படுகிற ஒரு சொல்லாக போய்விட்டது "வஹாபியிஸம்". சாதாரண முஸ்லிம்கள் கூட இந்த பெயரை முதல்முறையாக கேட்டால் ஏதோ கெட்ட விசயமாக்கும் என்று ஒதுங்கி கொள்கிற மாதிரியாக ஆக்கிவிட்டார்கள். உண்மையில் இந்த வஹாபியிஸம் என்றால் என்ன? அதன் தோற்றமும் பின்னனியும் என்ன? ஏன் இந்த பெயரை முஸ்லிம் அல்லாதோரும் தரீகாவாதிகளும் அதிகமாக பயப்படுத்துகின்றனர். ஏன் இது பற்றி எல்லாம் எழுத வேண்டும்?

முதலில் இந்த விடயத்தை மட்டும் பதிவு செய்து கொள்வோம். வஹாபியிஸம் என்பது முஹம்மது இப்னு வஹாப் என்பவரில் இருந்து தோற்றம் பெற்ற ஒரு சொல்லாடல். பத்து வயதில் குர்ஆனை ஹிப்fழ் செய்த ஒருவரை பற்றியது. ஓர் இறை கொள்கை பேசியதற்காய் ஊர்ஊராய் நாடுகடத்தப்பட்டவர். அறிவு தேடி, அரேபியாவின் கிழக்கு நஜ்ரானில் இருந்து ஈராக்கின் பஸ்ரா வரை அலைந்து திரிந்த ஒரு மனிதர். புறக்கணிப்பும் ஏற்புமாய் ஒரு அன்பிbயா அளவுக்கு கஷ்டங்களை எல்லாம் அனுபவித்த ஒரு மனிதர். பதினெட்டாம் நூற்றாண்டின் இஸ்லாத்தின் மீள்வருகை இந்த மனிதரை ஒட்டியே இருந்தது. The book of Thowheed (அறபியில் அவர் எழுதிய இந்த pamphlet ஆங்கிலத்திலும் கிடைக்கும் ) எழுதியதற்காய் கபுறு வணங்கிகளினதும் ஆட்சியாளர்களினதும் எதிர்ப்பை சம்பாதித்தவர். ஒரு சிறந்த ஆசான். போராளி, தா்ஃயி.

இஸ்லாமிய கிலாபத்தை இல்லாது செய்ய western missionary களின் நீண்ட கால திட்டங்களின் ஒன்றாக வஹாபியிஸம் பயன்படுத்த பட்டதாக தவறாக (சரியாக ) வரலாறுகளில் பதிவு செய்யப்பட்டுள்ளது. பனினெட்டாம் நூற்றாண்டின் கடைசியில் வெளிவந்த Diary of a British spy என்ற புத்தகம் தான் முதன்முதலில்

"வஹாபியிஸம்" என்ற சொல்லை பாவித்ததாக எனக்கு ஞாபகம். இத்தகவல் பிழையாக இருக்கலாம்.

முஹம்மது இப்னு வஹாப் பற்றி நிறைய எழுத வேண்டும். அவருடைய போராட்டங்கள், தௌஹீத் என்ற ஒற்றை சொல்லுக்காக ஒரு மனிதன் எவ்வளவு தூரம் பிரயாணிக்க வேண்டும் என்பதற்கான அண்மைய சான்று.

உங்களை பார்த்து யாராவது "you are a fundamentalist" என்று சொன்னால், பெருமை பட்டுக்கொள்ளுங்கள். நீங்களும் அவர்களுக்கு " வஹாபி" ஆகிவிட்டீர்கள்.

************

அது 1703 ம் வருடம். கிழக்கராபியாவின் Najd பிராந்தியத்தின் uyayna எனும் சிறுகிராமத்தில்தான் முஹம்மமது இப்னு அப்துல் வஹாப் அவர்கள் பிறந்தார்கள். வஹாபிஸம் பிறந்தது என்றே வைத்துகொள்வோமே. சிறுவன் முஹம்மதுவுக்கு சிறுவயது முதலே குரானின் மீது ஒரு ஈர்ப்பு இருந்தது. பத்து வயதுக்கும் முன்னமேயே, முழுக்குர்ஆனையும் மனனம் செய்துவிட்டான். பன்னிரண்டு வயதில் இருந்து அவனுக்கு கேள்விகள் எழுகிறது. பதினான்கு வயதில் ஊரில் உள்ள உலமாக்களை கேள்வி கேட்கிறான். அவர்களுடைய பதில் அவனுக்கு சிரிப்பைதான் வரவழைத்தன. சிறுவன் முஹம்மத் அவர்களைவிட அதிகம் கற்றிருந்தான். அவர்களின் மீது அவனுக்கு இருந்த நம்பிக்கை போய்விடுகிறது. ஆனால் அவனுடைய அறிவுத்தாகம் தணியவே இல்லை. அரேபியாவின் மேற்கில் இருக்கிறது ஹிஜாஸ் நகரம். அங்கே சென்றால் நிறைய கற்கலாம் என யாரோ கூற, அந்த திசை நோக்கி முஹம்மது நடக்க தொடங்கினார். ஹஜ்ஜை முடித்தார். யார் யாரிடமெல்லாம் அறிவிருக்கிறதோ அவர்களுக்கு எல்லாம் மாணவராகி கற்றுக்கொண்டார். அவரது நோக்கம் ஹிஜாஸில் நிறைவேற, மீண்டும் தனது சொந்த ஊரிற்கே வந்து தந்தையிடம் கல்வியை தொடர்ந்தார். இருபது வயதுகூட இன்னும் ஆகவில்லை. ஒரு இளைஞன் ஊர்ஊராய் மூட்டை முடிச்சுகளுடன் அலைந்து கொண்டிருக்கிறான். இந்த சமுதாயம் றஸூல் அழ்ழாஹ் காட்டித்தந்த வழியில் இல்லை என்பது அந்த

இளைஞசனுக்கு பெரும் மன உளைச்சலை ஏற்படுத்துகிறது. ஏதாவது செய்ய வேண்டும். வழிகேடுகள் இல்லாத முஸ்லிம் சமூகம் ஒன்றை கட்டி எழுப்ப வேண்டும். மக்களை நல்வழிப்படுத்த வேண்டும் என்கிற நினைப்பு மேலோங்க, அன்றைய அறிவின் நகரமாய் இருந்த Bashra வை நோக்கி மீண்டும் மூட்டை முடிச்சுகளுடன் ஒரு பயணத்திற்கு தயாரானார் உலக வஹாபிகளின் தந்தை ஷேக். முஹம்மது இப்னு அப்துல் வஹாப்.

*************

பனினெட்டாம் நூற்றாண்டின் ஆரம்பம். அரேபியாவில், இஸ்லாத்தின் முக்கியமான ஒரு கேந்திர நிலையம். அங்கே மத்தியில் ஒரு பெரிய பள்ளிவாசலில். மஃரிப் உடைய நேரம். நான்கு முறை அதான் சொல்லப்படுகிறது. நான்கு முஸல்லாக்கள் விரிக்கபட்டு நான்கு இமாம்களால் வெவ்வேறு நேரங்களில் அங்கு மஃரிப் தொழுவிக்கப்படுகிறது. தனது தந்தை உடன் பள்ளிக்கு தொழ வந்த அந்த சிறுவன் தனது தந்தையை கேட்கிறான் "ஏன் இவ்வாறு நான்குமுறை தொழுவிக்குறார்கள்". "நான்கு மத்ஹபுகளையும் பின்பற்றுபவர்களும் தொழவேண்டும் இல்லையா? அதுதான் அப்படி" என விளக்கம் கொடுக்கப்படுகிறது. சிறுவனுக்கு ஏதோ தப்பாய் தெரிகிறது. "நாங்கள் ஹன்பலி மத்ஹபுகாரர்கள், நீ அது மட்டும்தான் கற்க வேண்டும்" என மார்க்க அறிஞரான தனது தந்தையால் சிறுவனுக்கு வலியுறுத்தப்படுகிறது. "அப்போ றஸூல் அழ்ழாஹ் எந்த மத்ஹப்?" என்று சிறுவன் தனக்கு தானே யோசிக்க தொடங்கினான். அங்கேயே "வஹாபியிசம்" பிறந்துவிட்டது.

மத்திய பிரித்தானியாவின் லண்டன் மாநகரம், சத்தம் அடங்கிபோன ஒரு இரவு பொழுது. The Ministry of Commonwealth யில் ஒரு ரகசிய கூட்டம். இந்தியாவை ஆட்கொண்டது போல அராபியாவையும் உத்மானிய சாம்ராஞ்யத்தையும் கையகப்படுத்தல் சம்பந்தமாக விளக்கம் கொடுக்கபடுகிறது. "We captured Spain from the disbelievers [he means Muslims] by means of alcohol and

fornication. Let us take all our lands back by using these two great forces again.” என்று சொல்கிற போது Hempher தனது நோட்டு புத்தகத்தில் அதை குறித்து கொள்கிறான்.

தனது தணியா அறிவு தாகத்தை தீர்க்க இளைஞர் முஹம்மது பின் அப்துல் வஹாப், அன்று அறிவின் நகரமாய் இருந்த இராக்கின் பஸ்ராவுக்கு போவது என முடிவு செய்கிறார். அது 1724 ஆம் வருடம்.

பஸ்ரா, ஒரு அழகான செழிப்பான நகரம். சுன்னிகளும் ஷியாக்களும் என கலந்து வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அன்றைய ஸுன்னி முஸ்லிம்களின் நிலையோ பாரிய கவலைக்கிடமானதாய் இருந்தது. பித்அத்களில் மூழ்கி, இஸ்லாத்தில் இருந்து வெகு தூரமாகி இருந்தார்கள். கற்றறிந்த அறிஞர்கள் கூட மத்ஹப்களை பின்பற்றுகிறோம் எனக்கூறி மார்க்கத்தை கூறு போட்டு வைத்திருந்தார்கள்.

அழ்ழாஹ் உடைய வஹியில் இருந்துமான குர்ஆனுடனும் ஹதீதுடனும் இஸ்லாத்தின் மூல ஆதாரமாய் இஜ்மா கியாஸ் என இன்னும் இரண்டையும் சேர்த்தும் விட்டிரிந்தார்கள்.

இவ்வாறான ஒரு காலகட்டத்தில்தான் இமாம் முஹம்மது இப்னு அப்துல் வஹாப் அவர்கள் கல்வி கற்கிற நோக்கில் பஸ்ரா நகரில் காலடி எடுத்து வைக்கிறார்கள். ஷியாக்களும் சுன்னிகளும் சரிசமமாக இருந்த அன்றைய பஷ்ரா நகரம், இமாம் அவர்கள் கல்வி கற்பதற்கு தோதானதாக இருக்கவில்லை. மாறாக, அங்கிருக்கும் முஸ்லிம்களுக்கு இஸ்லாத்தை அதன் தூய வடிவில், கண்மணி நாயகம் ஸல்லழ்ழாஹு அலைவசல்லம் அவர்கள் காட்டித்தந்த , கற்றுத்தந்த அதேவழியில் மக்களை நல்வழிப்படுத்த வேண்டிய தேவையை இமாம் அவர்கள் உணர்ந்து கொள்கிறார்கள். இந்த நிலைமை அவர்களை பெரும் கவலையில் ஆழ்த்திவிடுகறது.

இதே நேரம் வழிகெட்ட ஷியாக்களின் கொட்டத்தை அடக்க வேண்டிய தேவையையும் இமாம் அவர்கள் உணர்ந்து கொள்கிறார்கள்.

பஸ்ராவில் இமாம் அவர்கள் எதற்காக போராடினார்கள்? யாருடன் போராடினார்கள்? இந்த சூபிகள் ஏன் இமாம் அவர்களை இவ்வளவுக்கு வெறுக்கிறார்கள்? அவர்கள் இமாம் மீது சொல்கிற குற்றச்சாட்டு என்ன?

****************

பதினெட்டாம் நூற்றாண்டு. அராபியாவின் ஹிஜாஸ் பிராந்தியம் தவிர்த்து, மற்றய எல்லா பிரதேசங்களும் அரேபியர்களாலேயே ஆட்சி செய்யப்பட்டு வந்தது. குர்ஆனின் மொழி, நபி உடைய மொழி என எல்லா அந்தஸ்துகளும் உள்ள மொழியை பேசுகிற அறபிகள் எங்களை; அஜமிகள், துருக்கியர் ஆள்வதா என அரேபியர்கள் தங்களை அப்போதிருந்த உத்மானிய கிலாபத்தில் இருந்து விடுவித்து கொண்டார்கள் என ஒரு சாரார் வரலாற்றை கூறுகின்றனர். அதேபோலவே, பாரசீகத்தின் ஒரு பகுதியாய் ஈராக்கின் பஷ்ராவும் கிலாபத்திற்க்கு கீழே இருக்கவில்லை.

இந்த வரலாற்றுக்கு பின்னனியில் அன்றைய வல்லரசு, பிரித்தானியா இருந்ததாக இன்றும் ஒரு சாரார் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். இது அராபிய வரலாற்றின் நீட்சியுடன் சம்மந்தப்பட்டது.

இன்றைய அமெரிக்காவின் ஏகாதிபத்தியத்தின் ஒரு செயல்வடிவம் 'The Economical Hitman' ( பொருளாதார அடியாள் ) கலாச்சாரம் போல, அன்றைய பிரித்தானியாவின் ' Spy' ( ஒற்றன் ) கலாச்சாரம் பரவலாக வரலாற்றில் பேசப்பட்ட ஒரு பேசு பொருளாக இருந்தது, இன்னும் இருக்கிறது. இந்த ஒற்றர்களின் வேலை; பிரித்தானிய சாம்ராஜ்ஜியத்தின் எல்லையை விரிவுபடுத்துவதற்காக, மற்றய நாடுகளில் உட்புகுந்து, அவர்களுடன் வாழ்ந்து, அவர்களுக்கு The Ministry of Commonwealth யினால் கொடுக்கப்பட்ட வேலையை கச்சிதமாக செய்து முடிப்பது.

1888ஆம் வருடம். உத்மானிய பேரரசின் அந்திமம். முப்பத்தி நான்காவது உத்மானிய சுல்தான், அப்துல் ஹமித் கான் II யின் ஆட்சிகாலம். Rear Admiral, ஐயூப் ஷப்ரி பாஷா, தன்னுடைய Mir'at al-Haramayn என்கிற ஐந்து

தொகுதி வரலாற்று நூலை இஸ்தான்புல்லில் வெளியிடுகிறார். வரலாற்று நெடுகிலும் இருந்த பெரும்பாலான முஸ்லிமும் முஸ்லிமல்லாத வரலாற்று ஆசிரியர்கள், இந்த நூலை Strongly politically motivated book ( அரசியல் ஆதாயத்திற்காய் எழுதப்பட்ட வரலாற்று நூல் ) என மறுத்து வந்திருக்கிறார்கள். அதற்கான காரணங்களையும் சொல்லி இருக்கிறார்கள்.

ஐயூப் ஷப்ரி பாஷா, தன்னுடைய வரலாற்று நூலின் பாகம் மூன்றில் Hempher என்கிற பிரித்தானிய உளவாளியையும் அவனது நாட்குறிப்பு ( Hempher's Diary ) பற்றிய செய்திகளையும் முதன் முதலில் அறிமுகம் செய்கிறார். Hempher பற்றிய வரலாற்று பின்னனியோ, 1700 களில் எழுதப்பட்ட அவரின் நாட்குறிப்பு பற்றிய குறிப்புகளோ 1888 வரை வரலாற்றில் வேறு எங்கிலும் பதிந்திருக்கப்படவில்லை என்பது இங்கே கவனிக்கத்தக்கது.

யார் இந்த Hempher? அவருக்கும் எங்களுடைய வஹாபியிசம் தொடருக்கும் என்ன சம்மந்தம்?

ஐயூப் ஷப்ரி, Hempher யை ஒரு பிரித்தானிய உளவாளியாய் அறிமுகப்படுத்துகிறார் என்று பார்த்தாயிற்று. இனி, ஆசிரியர் கூற்றுபிரகாரம், Hempher 1710 யில் துருக்கியிலும் பின்னர் பஷ்ராவிலுமாய் பிரித்தானியாவின் Ministry of Commonwealth ஆல் பணிக்கு அமர்த்தபடுகிறார். பஷ்ராவில் அப்துர் றிழா என்கிற ஷீயா பிரிவைச் சேர்ந்த மரதளபாட உற்பத்தியாளர் ஒருவரை சந்தித்து அவரிடம் பணிக்கு அமர்கிறார். 1711 யில் அவர் முஹம்மது இப்னு அப்துல் வஹாப் என்கிற இளைஞரை சந்திக்கிறார். *( இவ்விடத்தில் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்; நஜ்தின் வரலாற்றை எழுதிய இரண்டு வரலாற்று ஆசிரியர்கள் உட்பட பல வரலாற்று சான்றுகளில் முஹம்மது இப்னு அப்துல் வஹாப் 1703-1704 யில் பிறப்பதாகத்தான் பதிவு செய்யப்பட்டிருக்கிறது.)*

ஈராகிற்க்கான பிரித்தானியாவின் The British council 1767 யில் தான் முதன்முதலில் செயற்பட தொடங்குகிறது.

இவை இரண்டும் ஐயூபின் வரலாற்று நூலின் நம்பகத்தன்மையை கேள்விக்குள்ளாக்கும் விடயங்கள். இதுபற்றி பின்னர் பார்ப்போம்

இனிவருவது, ஐயூப் ஷப்ரி பாஷாவின் வரலாற்று நூலில் இருந்து தொகுக்கப்பட்ட Confession of a British Spy என்கிற நூலில் இருந்து தமிழாக்கம் செய்யப்பட்ட பகுதிகள்.

Hempher சொல்கிறார்...

\\ *அவர்கள் என்னை நம்புகிறார்கள். நான் துருக்கி மொழி பேசியதால் என்னை அவர்கள் அஸர்பைஜான் நாட்டைச் சேர்ந்தவன் என நம்பியிருந்தார்கள் என்பது பின்னர்தான் தெரிய வந்தது.*

*இடையிடையே ஒரு இளைஞர் மரத்தளபாடம் செய்யும் வேலைத்தளத்திற்கு வருவது வழக்கம். அவரது தோற்றத்தையும், நடை உடை பாவனையையும் கொண்டு அவர் ஒரு விஞ்ஞான ஆய்வுகள் செய்துகொண்டிருக்கின்ற ஒருவர் என்றும், அவர் அறபு, துருக்கி, பாரசீக மொழிகளை விளங்கிக் கொள்ளக்கூடியவர் என்றும் அறிந்துகொண்டேன். அவரது பெயர்#முஹம்மத_பின்_அப்துல்_வஹாப்_நஜ்தி.*

*இந்த இளைஞர் மிகவும் முரட்டுத்தன்மை கொண்டவராகவும் பதட்டமானவராகவும் இருந்தார். உதுமானிய அரசினைப்பற்றி மிகவும் மோசமாகப்பேசினார். ஆனாலும் ஈரானிய அரசினைப்பற்றி எதுவுமே பேசியதில்லை. இந்த இளைஞரும் உதுமானிய அரசுக்கு எதிரான கருத்துக்களை கொண்டிருந்ததாலேயே இருவரும்* அடிக்கடி சந்தித்துக்கொண்டனர். நல்ல நண்பர்களாகவும் ஆகினர்.*

*(* மர தளபாட கடை உரிமையாளரான அப்துர்_றிழாவும், இப்னு வஹாபும்)*

*இந்த இளைஞன் சுன்னி முஸ்லிமாக இருந்தும் ஷீயாவான றிழாவுடன் எவ்வாறு நட்புடன் பழகினார்? ஏனென்றால் இந்த ஊரில் சுன்னி முஸ்லிம்கள்*

*ஷீயாக்களுடன் நட்புடனும்,சகோதரத்துவ வாஞ்சையுடனும் பழகுவதாகக் காட்டிக்கொண்டிருந்ததே அதற்கான காரணமாகும்.*

*இந்த ஊரில் இருந்த அதிகமானவர்கள் அறபு மொழியையும் பாரசீக மொழியையும் விளங்கக்கூடியவர்களாக இருந்தனர். அதிகமானவர்கள் துர்க்கிய மொழியையும்கூட விளங்கக்கூடியவர்களாகவே இருந்தனர்.*

*உண்மையில் முஹம்மத் ஒரு சுன்னி முஸ்லிம். பொதுவாகவே சுன்னி முஸ்லிம்கள் ஷீயாக்களை தடைசெய்திருந்ததுடன் அவர்களை காபிர்கள் என்றும் சொல்லி வந்தனர்.*
*ஆனால் இவர் ஒருபோதும் அவ்வாறு குற்றம் சாட்டியதில்லை. *

*இதுதான் Hempher, முஹம்மது இப்னு அப்துல் வஹாப் பற்றி தன்னுடைய நாட்குறிப்பில் குறிப்பிட்டதான ஆரம்ப விவரினை என ஐயூப் தன்னுடைய வரலாற்று நூலில் எழுதி இப்னு வஹாப் மீது ஒரு ஷீயா சாய்வு விம்பத்தை உருவாக்கி இருக்கிறார்.*

******************

'வஹாபியிசம்' என்கிற சொல்லின் ஆரம்ப வரலாற்று பின்னனி பற்றி பார்த்தாயிற்று. குறிப்பாய் இன்று, மேற்கு ஊடகங்களில் அதிகமாக முஸ்லிம்களுக்கு எதிராக பயன்படுத்துகின்ற 'வஹாபிசம்' என்ற சொல்லை, 2001 யில் மேற்கிற்கு அறிமுகப்படுத்திய சூபிகளின் அடிப்படை மூலாதாரமாய் இருந்த நூல் 'Mir'at al-Haramayn' பற்றியும் அதை எழுதிய ஐயூப் ஷப்ரி பாஷா பற்றிய அறிமுகத்தையும் எழுதியாயிற்று.
இந்த பத்தியில், மேல்குறித்த நூல் எழுதப்பட்ட பின்னனி பற்றியும், அந்த நூலின் உள்ளடக்கங்களையும் ( குறிப்பாய் Hampher's Diary பற்றிய பகுதிகளை ) சற்று விரிவாக ஆராய்ந்தால், வஹாபிசத்துக்கு எதிரான பரப்புரையின் முதலாவதும் பிரதானமானதுமான குற்றச்சாட்டான ' முஹம்மது இப்னு அப்துல் வஹாப் ஒரு பிரித்தானிய ஏஜென்டு' என்பதை காற்றில் பறக்க விட்டுவிடலாம், இன்ஷாஅழ்ழாஹ்.

1923-1924 ஆம் ஆண்டுகளில், துருக்கியை மையமாக்கிகொண்டு ஆட்சி செய்த உத்மானியர்களின் இஸ்லாமிய கிலாபா உடைகிறது. 1888 யில் உத்மானிய பேர்ரசின் Rear Admiral ஆய் இருந்த ஐயூப் ஷப்ரி பாஷா என்பவரால் Mir'at al-Haramayn என்கிற ஐந்து தொகுதிகளை கொண்ட வரலாற்று நூல் வெளியிடப்படுகிறது. (இந்த நூலின் ஆங்கில மொழிபெயர்ப்பை www.Sufi.it என்கிற வெப்சைட்டில் காணலாம்) இந்த நூல் முழுவதுமாய் உத்மானிய சாம்ராஞ்யத்தின் புகழ்பாடுவதாகவும், அதன் எதிரிகள் எனக் கண்டோரை இழிவுபடுத்துவதுமாக ஒரு நாவலின் சாயலில் எழுதப்பட்டிருப்பதை இந்த நூலை வாசிப்பவர்கள் எளிதில் புரிந்து கொள்ளலாம்.

( இந்த நூலில் இருந்து தொகுக்கப்பட்ட ஹெம்பரின் டயரி ( Confession of a British spy) என்கிற நூலில் இருந்து, வஹாபிசம் சம்மந்தமாக பேசுகிற இரண்டு பகுதிகளின் முழுமையான மொழிபெயர்பை இந்த 'வஹாபிசம்' தொடரில் உங்களுக்கு தமிழில் வாசிக்க கிடைக்கும். நீங்களே இது ஒரு வரலாற்று நூலா அல்லது நாவல் வடிவில் சோடித்து எழுதப்பட்ட கட்டுக்கதையா என்பதை முடிவெடுத்துக்கொள்ளலாம்.)

இருபதாம் மற்றும் இருபத்தியோராம் (1900 யில் இருந்து இன்று வரைக்கும்) நூற்றாண்டுகளின் முக்கியமான பெரும்பாலான வரலாற்று ஆசிரியர்கள் இந்த நூலை ஒரு வரலாற்று நூலாக ஏற்றுக்கொள்ளவே இல்லை. அவர்கள் எல்லாம் இந்த நூலை Turkish conspiracy theory - probably fabricated by Ayyub Sabri Pasha ( ஐயூப் ஷப்ரி பாஷாவால் இட்டுக்கட்டி எழுதப்பட்ட துருக்கிய சதிக் கோட்பாடு ) என்று பழித்துத்தான் விளித்திருக்கிறார்கள். குறிப்பாக ஹார்வர்ட் பல்கலைக்கழகத்தின் பேராசிரியர் ( professor in Near Eastern Studies ) Bernard Haykel இந்த புத்தகத்தை பற்றி எழுதுகிறபோது - It is a neat little tale, not unlike a protocols ( வரைமுறைகள் ஏதும் இல்லாது எழுதப்பட்ட ஒரு 'கதை' ) என்பதாகத்தான் குறிப்பிடுகிறார். ( பார்க- blogs.harvard.edu and search for Anti-Wahhabism: a footnote)

ஏன் இந்த வரலாற்று நூலை, வரலாற்று ஆசிரியர்கள் நம்பகத்தன்மை அற்ற நூல் எனக்கூறி நிராகரிக்கிறார்கள்?

இந்த கேள்விக்கான பதிலை, குறித்த இந்த நூலில் வஹாபிசம் சம்பந்தமாக கூறப்பட்டுள்ள விடயங்களை மட்டும் ஆராய்ந்து நிறுவி விடுவோம்.

1) 1700 களின் ஆரம்பத்தில் வாழ்ந்ததாக கூறப்பட்டுள்ள பிரித்தானிய உளவாளி Hempler பற்றிய குறிப்புக்கள் சுமார் இரண்டு நூற்றாண்டுகள் கடந்த நிலையில் 1888இல் ஐயூப் ஷப்ரி பாஷாவுக்கு எவ்வாறு கிடைத்தது என்பது பற்றிய வரலாற்று பின்னனி அவரது நூலில் ஒரு இடத்திலேனும் குறிப்பிட்டு கூறப்படவில்லை.

2) இந்த இரண்டு நூற்றாண்டுகளிலும் எழுதப்பட்ட வேறு எந்த வரலாற்று நூல்களிலும் Hempler பற்றிய குறிப்புகளோ கொசுருகளோ இல்லை. இரண்டு நூற்றாண்டு தாண்டி, ஐயூபிற்கும் மட்டும் எங்கிருந்து Hempler முளைத்தார்?

3) ஹெம்லரின் டயரி என பெயரிடப்பட்டுள்ள புத்தகத்தில் ஒரு நாட்குறிப்புக்கான எந்த லட்சணங்களும் இல்லை. ஒரு நாட்குறிப்பு என்றால், ஆண்டு, மாதம், திகதி என ஒழுங்காக நாட்கள் குறிப்பிடப் பட்டிருக்க வேண்டும். அதில் இடம்பெற்றுள்ள சம்பவங்கள் ஒன்றுக்கொன்று சம்மந்தமில்லாததாய், அன்றன்று நடந்த விடயங்களின் தொகுப்பாக இருக்கவேண்டும். ஆனால். மாறாக Hempler யின் டயரி என்கிற இந்த புத்தகத்தில் இரண்டே இரண்டு இடங்களில் மாத்திரமே ஆண்டுகள் குறிப்பிடப்பட்டுள்ளது. சம்பவங்கள் எல்லாம் ஒரு தொடராய், ஒரு குறு நாவலை வாசிப்பதை போல கட்டமைக்க பட்டுள்ளது. இது ஒரு டயரயில் எவ்வாறு சாத்தியம்?

4) பல வரலாற்று சான்றுகளில் முஹம்மது இப்னு அப்துல் வஹாப் 1703-1704 யில் பிறந்ததாகத்தான் பதிவு செய்யப்படுள்ளது. ஆனால் Hempler யின் டயரியில், Hempler, இப்னு அப்துல் வஹாபை 1711 யில் பஷ்ராவில் சந்தித்ததாகவும், அந்த வேளையில் இப்னு அப்துல் வஹாப் மூன்று மொழி பேசக்கூடியவராகவும், விஞ்ஞான ஆய்வு செய்பவர் போல தோற்றமளித்ததாகவும் கூறப்பட்டுள்ளது. 1711 யில் முஹம்மது இப்னு அப்துல் வஹாபிற்கு 8 அல்லது 9 வயதிருக்கும். இந்த

வயதில் எவ்வாறு ஒரு சிறுவனால் அராபியாவின் நஜ்த் ( தற்போதய றியாத் ) பிரதேசத்தில் இருந்து தனியே பஷ்ரா ( தற்போதைய ஈராக் ) க்கு பிரயாணம் செய்திருக்க முடியும்?
அந்த ஒன்பது வயதில் மூன்று மொழியும் விஞ்ஞான ஆய்வும் எப்படி சாத்தியம்? பதினெட்டாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் நஜ்தின் வரலாற்றை எழுதுகிறவர்கள், முஹம்மது இப்னு அப்துல் வஹாப் 1722 யில் தனது இருபதாவது வயதில்தான் பஷ்ரா நோக்கி பயணமானார் என குறிப்பிட்டு எழுதி உள்ளார்கள்.

இவ்வளவு கேள்விகளும் சந்தேகங்களும் உள்ள இதே நூல்தான் ' வஹாபிசம்' என்கிற சொல்லை உலகிற்கு முதன்முதலில் அறிமுகம் செய்தது. இந்த நூலை அடிப்படையாக கொண்டுதான், தங்களை பெரும் சூபி உலமாக்களாக காட்டிக்கொள்கிறவர்கள் வஹாபிசத்துக்கு எதிரான தங்களுடைய பரப்புரையை முடக்கி விட்டிருக்கிறார்கள். அவர்களுடைய வஹாபிசம் சம்மந்தமாக எழுதப்பட்ட புத்தகங்களை இந்த டயரி பற்றி குறிப்புகள் இல்லாமல் தொடங்கவே முடியாது.
அவ்வாறு இருக்கையில், இந்த டயரியே ஒரு இட்டுக்கட்டப்பட்ட பொய்களின் தொகுப்பு என இந்த பகுதியில் நிறுவியாயிற்று. ஆகவே இவர்களின் அடிப்படையும், ஆரம்ப குற்றச்சாட்டுகளும் பிழையாய் போயிற்று. இந்த புத்தகத்தில் எழுதப்பட்டுள்ள வஹாபிசம் சம்மந்தமான மற்ற பொய்களையும், முஹம்மது இப்னு அப்துல் வஹாப் மீதான மற்றைய குற்றச்சாட்டுகளும் அதற்கான பதில்களையும் ஒவ்வொன்றாய் பார்க்கலாம்.

இப்போது மொழிபெயர்க்கப்பட்ட Hempler யின் டயரியின் முந்தய பகுதியின் தொடர்ச்சியை கீழே வாசித்து விடுங்கள்.

\\ முஹம்மதை பொறுத்த மட்டில் முஸ்லிம்கள் நான்கு மத்ஹபுகளை பின்பற்ற எந்தத்தேவையுமில்லை. இந்த மத்ஹபுகளைப்பற்றி அல்லாஹ் குர்ஆனிலே எதுவும் கூறவில்லை என்று சொல்பவராக இருந்தார். அவர்வேண்டுமென்றே இதுபற்றி வருகின்ற குர்ஆன், ஹதீஸை மறுத்தார்.

நான்கு மத்ஹப்களை பொறுத்தமட்டில் நபி(ஸல்) அவர்கள் மரணித்து ஒருநூற்றாண்டின் பின் சுன்னி முஸ்லிம்களிடையே இருந்த நான்கு உலமாக்கள் இஸ்லாத்தை விளங்கப்படுத்துகின்ற பணியை செய்ய முன்வந்தனர்."அஹ்மத் பின் ஹன்பல்" , "அபூஹனீபா" ,"மாலிக் பின் பாஸ்" ,"ஷாபிஇ" ஆகியோர்களே அவர்கள்.

சில கலீபாக்கள்(ஆட்சியாளர்கள்) இந்த நால்வரில் ஒருவரை தங்களது வழிகாட்டியாக தேர்வுசெய்து கொள்ளுமாறு மக்களைப் பணித்தனர்.

முரட்டுத்தனமான அந்த இளைஞன் முஹம்மட் 'குர்ஆன், ஹதீஸை விளங்குவதற்கு தனது பகுத்தறிவையும் ஆழ்மனதின் வழிகாட்டல்களையும் பின்பற்றி வந்தார். இந்த இளைஞர், அவரது காலத்து நான்கு இமாம்களை மறுத்ததோடுநின்றுவிடாமல் அபூபக்ர், உமர் (ரலி) ஆகியோரது வழிகாட்டல்களையும் கூட மறுத்து வந்தார்.

அந்த ஸஹாபாக்களினதும் உலமாக்களினதும் விளக்கங்களும் புரிதல்களும் குர்ஆனுக்கு முரண்படுவதாக அவர் விளங்கிக்கொண்ட சந்தர்ப்பங்களில் ' நபி (ஸல்) அவர்கள் ஒருபோதும் நான் உங்களுக்கு ஸஹாபாக்களையும் மத்ஹபுகளையும் விட்டுச் செல்கிறேன் என்று சொல்லவில்லை. மாறாக குர்ஆனை, ஹதீஸை உங்களுக்காக விட்டுச் செல்கிறேன் என்றே சொன்னார்கள்' என்று கூறுவார்.

அதனால் குர்ஆனையும் ஸுன்னாவையும் பின்பற்றுவதே பர்ளு என்றும் அது ஸஹாபாக்கள், இமாம்களின் புரிதல்களுக்கும் விளக்கங்களுக்கும் செவிசாய்க்க வேண்டியதில்லை என்றும் கூறிவந்தார். குர்ஆன், ஹதீஸ் பற்றிய இவரது புரிதல்கள் பலஇடங்களில் இமாம்களினதும் ஸஹாபாக்களினதும்புரிதல்களுக்கும் முற்றிலும் மாறுபட்டவையாக இருந்தன. ஆனாலும் குர்ஆன், ஹதீஸை நேரடியாக பின்பற்றுவதே பர்ளு என்றும் இமாம்களையும் ஸஹாபாக்களையும் பின்பற்றுவது அவசியமில்லை என்றும் கூறி வந்தார்.\\